ஓம் சுத்த சக்தி.

அன்பு மலர் ௭.

# தரும ஸாதனம்

(புதிய அறநூல்)



# DHARMA SADHAN

சுவாமி சுத்தானந்தபாரதியார்

ஓம் சுத்த சக்தி.

அன்பு மலர் ௪.

சுவாமி சுத்தானந்தபாரதியாரின்

# தரும ஸாதனம்

(புதிய அறநூல்)





# DHARMA SADHAN

சிங்கப்பூர் அன்பு நிலயத்தார் வெளியீடு.

# பதிப்புரை.

இறைவன் திருவருளால், நான்காவது அன்புமலரை உலகன்னை திருவடியில் வைத்து வணங்குகிறோம். சுவாமி சுத்தானந்தபாரதியார், சிறுவயதுமுதல் ஆத்யாத்ம வாழ்வினாலும், உலகானுபவத்தாலும் கண்ட நிலையான உண்மைகளைக் குறளடிகளாக அவ்வப்போது குறித்துவைத்துள்ளார். அவற்றிற் சில அறநூல் வடிவாகப்போந்துள்ளது தமிழுலகிற்குத் தெரியும். பல நல்லறிஞர் அதை மெய்ச்சியுள்ளனர். இந்நூல் ஆசிரியரின் முதிர்ந்த யோகசித்தியினின்று மலர்ந்தது. இது புதிய அறநூல். இதில் மனித வாழ்வு தெய்வீக வாழ்வாகும் உயர்ந்த தருமமார்க்கமும் அதன் சாதனமும் தெளிவாக்கப்பட்டுள்ளதால் நூலுக்கு தரும ஸாதனம் எனப் பெயர்வந்தது. இந்நூல் மிகவும் பயனுள்ள, அழகான விரிவுரையுடன் தமிழ்நேசன் ஆசிரியர் ஸ்ரீமான் நரசிம்மய்யங்காரால் வெளியிடப்பெற்றது. அதற்குத் துணையாகவே மூலத்தை வெளியிட்டுள்ளோம். தரும

ஸாதனம் விரிவுரையுடன் கற்று நிற்கும் எவருக்கும் ஆன்மாவிலூன்றிய இயலின்ப வாழ்வு துலங்கும். அவ் வழிச் சென்று மனித சமுதாயம் அன்பும் அருளும், வாய்மையும் தூய்மையும், அறிவும் ஆற்றலும் பொலிந்து இவ்வுலகிலேயே அமரவாழ்வு பெறுக! அதுவே இந் நூற்பயனாகும். இந்த தருமஸாதனம் மூலத்தை ஆர்வமுடன் வெளியிட்டு எமக்கு உதவிய அன்புத் திருவாளர் கண்டனூர் வயி. ராம. ப. பழநியப்பா என்னும் வள்ளல். இவரது தமிழார்வம் சுத்தானந்தக் கவிமலர்கள் முழுமையும் சேர்த்து, மாலையாகக் கோத்துத் தமிழன்னையின் மார்பில் அணிவிக்க எழுந்துள்ளது. இறைவனருளால் அவரது நல்விருப்பம் நிறைவேறுக!

அறக்கடவுள் வாழி! யறம்வாழி! வாழி
அறவோர் அருள்வெற்றியே!

தாதஞே, தைப்பொங்கல்.
14—1—37.

அன்பு நிலயத்தார்.

# தருமஸாதனம்.

## பொருளடக்கம்.

*ஓம் சத்தசக்தி*

எல்லா வுலகிற்
    கிறைவ ஞெருவன்
எல்லா வுடலு
    மிறைவ ஞலயமே.



ஓம் சுத்த சக்தி.

---

## வணக்கம்.

### எங்கும் நிறைவான பரம்பொருளே,

மங்களக் காலையில் மலர்முகங் காட்டுகின்றாய்! இள மணத் தென்றலில் இன்பக் குழலூதுகின்றாய்! "அன்பு அன்பு" என்று சோலைக் குயிலில் அகவுகிறாய்! அதோ பாயும் மலையருவியில், "ஓம் தத் ஸத் ஓம்!" என்று வேதமுரசொலிக்கிறாய்! திங்களில் அமுதநகை புரிந்து, எல்லையற்ற கடலைப் பொங்கியெழுந்து ஆனந்தகூத்தாடச் செய்கிறாய்! அருட் சுடராக அதோ உதித்து, கருணைக் கரங்களால் உலக வாழ்வைச் சித்தரிக்கிறாய்! இந்தக் குழந்தைகளின் மாசற்ற உள்ளத்தில் வானரசை இலக்குகிறாய்! மனைதோறும் சௌந்தர்யசக்தியாக விளங்கிக் குலதர்மத்தை வளர்க்கிறாய்! ஆணில் ஆண்மை, பெண்ணில் பெண்மையாகிக் காதற் கனலைத் தூண்டி, உலகம் உயிர்வாழச் செய்கிறாய். வாழ்க்கையென்னும் எல்லையற்ற கலாசாலையில், இயற்கையென்னும் ஆசானைக்கொண்டு பாடங்கற்பித்து, எமது மனத்தைப் பக்குவப்படுத்தி, முடிவில் உனது திருவடியே தஞ்சமென்று உணரவைக்கிறாய்.

உயிர்க்குயிராய், உள்ளந்தோறும் ஆன்மச்சுடராய்க் கனறும் பரம்பொருளே, உலகெலாம் உனது திருக்கோயில்; உயிர்த்தொகுதி உனது திருமேனி; வாழ்க்கை நினது திருவிளையாடல். உள்ளத்தில் உள்ள உன்னைத் தொட்டு நிற்பவர்க்கு உலகாடலின் இன்பதுன்பக் கட்டுகள் இல்லாமற் செய்கிறாய். உன்னைமறந்து, ஆணவக் காம மாயத்தில் மயங்கித் திரிபவரை நீண்டகாலம் இருவினைக் காட்டில் அலைந்து வருந்தி இளைத்து, முடிவில் உணர்ச்சிபெற்று, சர்வாந்தர்யாமியான நின்னையே காதலிக்கச் செய்கிறாய். காதல, நீ வேறு நாம் வேறின்றி, உள்ளும் புறமும் கலந்து, அந்தப் பேரின்பத்தால் உனது பாராலயத்தில் உலவச் செய்தருள். மாசற்ற மனமே நினது திருவடிக்கு யாம் சூட்டும் மலர். மனிதசமுதாயம் மென்மேலும் நித்தியமான நின்னைக் கலந்து வாழும் சுத்த முக்த ஸமத்வ நிலை பெறுதற்கு நாங்கள் புரியும் அருட்பணியே நினக்கு வழிபாடாகுக! பரமனே, நீயே உண்மை, நீயே அறிவு, நீயே யின்பம், நீயே எமது இறைவன். எவ்விதமான இடையீடுமின்றி, உள்ளார்ந்த அன்பினாலும், மனமடங்கிய தெள்ளறிவாலும், தியான மோன ஸமாதிகளாலும், வினைவேள்வியாலும், நின்னையடைந்து, எங்கும், எவ்வுயிரிலும் நின் மயங்கண்டு, எமது

மனச்சாட்சியாயிருந்து நீ காட்டும் அறவழியில் வாழத் துணைசெய்! புறக் கட்டுப்பாடுகள் இன்றி, ஆன்மசுயேச்சையில் மலர்ந்த உனது சுத்த தர்மமே எமது வாழ்வின் ஸாதனமாகுக! ஒவ்வோர் உள்ளமும் நினது விண்ணரசு. ஒவ்வொருவர் மனச்சாட்சியும் உனது தர்மச் செங்கோல். அதன்வழிபற்றி நாங்கள் நடக்கவருள். ஓம் சுத்த சக்தி!

சாதி-மத-நிற-தேச-வகுப்பு வேறுபாடுகள் எமது மனத்தை விகாரப் படுத்தாது, எவரையும் நினது நடமாடுங் கோயிலென்று காணும் அருளறிவை எமக்கருள்! கடவுளுறுதி, ஆத்மஞானம், மனோவாக்குக் காய சுத்தம், வாய்மை, உட்களிப்பு, அடக்கம், பொறுமை, நன்முயற்சி, அருள், அன்பு, இவையே எல்லா மதங்களின் சாரமாகும். எமது வாழ்வு இப்பத்துக் கொள்கைகளும் பொருந்தி விளங்கும் தர்மசாதனமாகுக! ஆன்ம உணர்வில் வேரூன்றி அறிவுக் கிளைகள் பரவி, அன்பு மலர்ந்து, எமது வாழ்வு இன்பக் கனி குலுங்கி, எல்லாக் கனிகளும், உயிர்த்தொகுதியாக விளையாடும் நினக்கே நிவேதனமாகுக! தந்தையே, நாங்கள் நின் மைந்தர் என்பதை எப்போதும் நினைத்து, இந்த உலகமனையில் ஒரு குலமாக ஒருவருக்கொருவர் உதவியாக வாழவருள். கொடுங்கோன்மை, தனியகந்தை, பொய், பொறாமை, ஆணவ

மாயம், கொலை, புலை, கோள், வஞ்சம், குடி, களவு, சூது, விபசாரம், சண்டை சச்சரவுகளின்றி, அன்பும், ஒப்புரவும், எளிமையும், பணிவும், இரக்கமும், அமைதியும், உண்டுடுக்க ஒரு யோக்கியமான தொழில் முயற்சியும், பயின்று, எங்கும் என்றும் எதிலும், உன்னையே கண்டு, உனக்கே வழிபாடாக வாழவருள். இறைவ, நீயே உலகிற்கு அரசன். அருட்கதிரை எங்கும் பரவி, ஐந்தொழில் நடத்தி உலகை ஆளுகிறாய். ஆகாயம் நினது அருட் குடை. அதன்கீழ் நாங்கள் உனது குடிகளாக வாழுகிறோம். வானமுதம் பொழிந்து, உலகிற் பயிர்களையும் உயிர்களையும் காப்பாற்றுகிறாய். எல்லையில்லாத இடத்தில் காலத்தேரில் நீ செல்லும் வேகமே காற்று! நாங்கள் உயிர்க்குந்தோறும், நீயே எமது உயிர், நீயே காற்றினும் எமக்கு அருகேயிருந்து எம்மை யாளும் கருணைவள்ளல் என்பதை மறவாது தியானிக்கும்படி அருள்செய்! சூரியனுடைய ஒளிக்கதிர்கள் உலகிருளை ஓட்டி, எமது கண்களில் ஊடுருவிச் செல்லுந்தோறும் உனது சைதன்னியப்பிரகாசத்தை உள்ளும் புறமும் உணரச் செய்தருள். மாசற்ற பிரம்மச் சரிய விரதத்துடன், அறிவு, கலை, தொழில், ஆற்றல், நல்லொழுக்கம், வீறு, பொதுநலத்திறமை, மனத்திண்மை முதலிய

நலங்களை நல்கும் உண்மைக்கல்வியைத் தக்க நல்லாசானிடம் கற்றுத் தேர்ச்சி பெறுவதிலேயே எமது இளமைப்பருவம் பயனுறுக! தக்க வயதும் உள்ளார்ந்த காதலும், கல்வியறிவாற்றலும் ஒழுக்கமும் ஒங்கிய ஆணும் பெண்ணும் கூடி, அன்பும் அறமும் பொருந்திய மங்கல மனைவாழ்வு வாழ்ந்து நன்மக்களைப் பெற்று, உனது உலகாடலுக்குத் துணையாக எமது வாலிபம் பயனுறுக! உலகில் நாங்கள் பெறும் ஒவ்வொரு அனுபவமும், பொய்யை நீக்கி மெய்துலக்கி, இருளையொழித்து ஒளியைக் காட்டி, மாசையகற்றித் தேசையளித்து, அகந்தை யொழித்து உன்னடி நேயம் பெருக்கி எம்மை ஒவ்வொரு நாளும், உன்னருட் கலப்பிற்குத் தயாராக்குக! இறைவனே, உள்விழிப்புடன் உன்னை உள்ளத்தில் எப்போதும் கண்டு, நீ நடத்தும் வெற்றித் தேர் போல, எமது வாழ்க்கை, முக்குணப்போர்க்களமாகிய இவ்வுலகரங்கிற் செல்லட்டும்.

எமது ஆற்றலுக்கேற்ற பொதுநலம் புரியத் துணை செய். வீடு வாசல், நிலபலம், மனை மக்கள் எல்லாம், நீ கொடுத்த செல்வம் என்ற எண்ணம் இருக்கட்டும். எனது யான் என்னும் அகந்தை வேரோடு அழிக. தொழில் முயற்சியால் வறுமையை விலக்கி, அறிவு வளர்ச்சியால் மடமை யொழித்து, ஆண்மையால் அடிமைப்பிணிகளைந்து, அன்பினால் பகையைவென்று, ஆன்மவுறுதியால் இடர்களைத் தாண்டி, ஒற்றுமையால் வேறுபாடுகளைப் போக்கி, எமது வாழ்வில் விண்ணமுது

பாய்ந்து இன்புறச் செய்! 55 ஆண்டுகளுக்குப் பின் நாங்கள் ஆணும் பெண்ணும், உனது திருவடியன்றி வேறு பற்றில்லாது உன்னையே அன்பு செய்து, தூய விரதம் பூண்டு, ஜபம், தபம், தியானம், மோனம், பக்தி, ஞான வைராக்கியங்களால், உள்ளே உன்னை ஆன்ம தேவதையாகக் கண்டுணர்ந்து கலந்து, யோகமும் பொது நலப்பணியுமே ஸாதனமாக வாழச் செய்! வைராக்கியத்தால் மனம் பழுத்து, உலகியல்பறிந்து, நீயே முடிவான உண்மை என்று கண்டு, உன்னையே உள்ளக்கோயிலிற் கலந்து, உணர்வால் வழிபட்டு உனது அழைப்பு வந்தவுடன் எவ்விதமான பந்தமும் பிணியும் பற்றும் பாசமும் இன்றி, உனது அகண்ட சேதனக்கடலில், சுத்த முக்தஸமத்வானந்தகங்கையாகக் கலந்துபோகச் செய்தருள். கர்ப்பூரம் எரிந்து காற்றில் மறைகிறது! காற்று ஆடி யலைந்து, முடிவில் ஆகாயத்தில் அடங்குகிறது. நதி வளைந்து வளைந்தோடிக் கடலிற் கலக்கிறது. நட்சத்திரங்கள் இரவில் நீண்ட யாத்திரை செய்து, காலைக் கதிரொளியிற் கலக்கின்றன. அதுபோலவே, இந்த ஜீவாத்மநதி, இருவினைக் கட்டுகளை நீக்கி, உனது அருட் சுடராழியிற் கலக்கவருள். பரமாத்மனே வணக்கம்! சுத்தனே வணக்கம்! உன்னருளுக்கு வழிகாட்டும் தர்மத்திற்கு வணக்கம்! உனது சுத்த தர்மச் சுடர்களான தர்மாத்மாக்களுக்கு வணக்கம்! அறக்கடவுள் வாழ்க! அறம் வாழ்க! அறவோர் வாழ்க! ஓம் சுத்த சக்தி!

## க. கடவுளியல்.

### க. கடவுள்.

ஓங்கார மாகி யொளியா யுயிர்க்குயிராய்,
* நீங்காதா னின்ப நிறைவு.

உள்ளத்தா னெங்கு முலகத்தான், பேரின்ப
வெள்ளத்தான், விண்ணின் விளக்கு.

† எண்குணத்தா னேகனே யெல்லா மடங்கவுளான்,
புண்ணியனும் போதப் பொருள்..

காற்றைக் கனலைக் கதிரைக் கடலுலகைத்
தோற்றினா னன்பர் துணை.

எல்லா மவ னுடைமை; யெல்லா மவனணை;
யெல்லா மவன்பொதுவென் றெண்.

---

* அழிவிலி, The Eternal.

† பெருந்தூய்மை, சுயேச்சை, ஆற்றல், அறிவு, இன்பம், முற்றுணர்வு, கட்டின்மை, இயல்பு திரியாதிருத்தல்.

## உ. உள்ளபொருள்.

பெயர்வடி வாதியதோர் பேதங் கடந்த
வுயர்பொருளொன் றுண்டென் றுணர்.

பலர்பற் பலவாகப் பாரிற் பகர்வர்;
உளனொருவ னென்றே யுணர்.

* ஐங்கோட்டைக் குள்ளே யரசாளு மன்னவனை,
§ ஐந்தடங்கி யன்பா லறி.

அருளாலே யுள்ளத் தறிவா யிலங்கும்
பொருளாலே யின்பப் பொலிவு.

விழிமி னெழுமினுளே விண்ணரசைக் கண்டு,
செழிமின்சச் சித்தானந் தம்!

---

* உடல், உயிர், மனம், அறிவு, இன்பம் ஆகிய பஞ்ச கோசம் § ஐம்புலன்.

## ௩. அருள் விளக்கம்.

அறிவுச் சுடரோ னருட்கதிரா லெங்கும்
நிறைந்த நிறைவை நினை.

*தாக்கற்று நோக்குந் தனித்தலைவன் சந்நிதிக்கே,
†யாக்கன்முத லைந்தொழிலு மாம்.

ஒன்றென் றுந் தோற்ற மொடுக்கமதி லேயென்றுங்
கண்டவனே காட்சிக் கிறை.

பிண்டத்தி லுள்ளான் பிரமாண்டத் திற்கோயில்
கொண்டுலவுந் தெய்வமெனக் கொள்.

நானென்னு மாயை நலிய நலியவுனைத்
தான்கொண்டு போற்றுமருட் ‡ டாய்.

---

* பற்றற்று,

† படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

‡ அருட்சக்தி.

## க. கடவுளியல்

### ச. வழிபாடு.

நேசம் பதிந்துள்ளே நின்றுருகி நெஞ்சாரப்
பேசினாற் பேசும்* பிரான்.

அன்புண்மை யாக வமர்ந்த கடவுட்குன்
னன்புண்மை யால்வழிபா டாற்று.

பற்றற்றுப் பற்றிப் பணிந்துணர்வா லர்ச்சித்துத்
தொட்டுநில் லஃதே துதி.

எனதென தென்ன லிடராகு மென்று
மவனது வென்ன வருள்.

தம்மைக் கொடுத்தோர்க்குத் தன்னையே தந்தருளும்
அம்மையப்ப னாணைவழி யாற்று.

---

* கடவுள்.

## ரு. கடவுட்டன்மை.

மகிழ்விற் படைத்தளித்து மாற்றுங் கடவுள்
அகத்தூய்மை யாலே யறி.

வாய்மை, நலநோன்பு, வன்றூண் டடக்கமிவை
* தூயோனைச் சேருந் துணை.

மெய்யன்பு, நல்லுறுதி மேதக்க † வொப்புரவுந்
துய்யவுளத் தொண்டர் துணை.

காமம் வெகுளி கலக்கமி லாதமனச்
‡ சேமத்தி னிறையைத் தேர்.

உள்ளப் § பொதுவெளியி லோங்கு மணிவிளக்கை,
¶ யுள்ளலற வுள்ளுறவிற் காண்.

---

* சத்தனை இறைவனை.
† பரோபகாரம்.
‡ காவல், காப்பு.
§ அம்பலம்.
¶ புறநினைப்பின்றி.

# உ. உலகியல்.

## க. உலகாலயம்.

உயிர்மேனி யாக்கொண்டே யோங்குமொரு சோதி
பயிலா லயமுலகு பார்.

ஆருயிர்கட் கோருயிரா யாங்காங்கு நின்றியங்கும்
*பாரால யத்தானைப் பார்.

விரிவா னுலகை விளங்கருளா லாடும்
பரமான்மா வாகவே பார்.

உலவுடலஞ் சிற்றுலகாம்; †உள்ளத்தான் கோமான்;
‡நிலவியல்பே நீதி நெறி.

இயற்கையே யாக்கை; இறைவனே யான்மா;
உயிர்க்குல மோர்தொடர்பென் றுன்.

---

* உலகையே கோயிலாய்க்கொண்ட விசுவமூர்த்தி.

† ஆத்மா அரசன்.

‡ அவரவருள் விளங்கும் இயற்குணம், சுபாவம்.

## உ. உலகநிலை.

உண்டில்லை யென்றேயாச் சண்டையேன்? உள்ளவரை
பண்டுலகிற் *பாங்குற் றிரு.

வகுக்கு மனமயக்கால் வையத்தைக் காணேல்;
உகக்கு மொளியறிவா னுன்.

இருப்ப தொருபொருளே; யெல்லா மதுவே;
பிரிப்பதுபொய் மாயப் பிணி.

ஆலுக்கும் பூசணிக்கு மாய்ந்து கனிகொடுத்த,
† ஞாலத்தான் ‡ வைப்பே நலம்.

மாறித் திரிந்து வளர்மன் னுலகினிலே
மாறாத் தொன்றை மதி.

---

* பெருமையுடன்

† உலகிற்கிறைவன்

‡ முறை வகுத்து வைத்த பான்மை.

உ. உலகியல்

## க. இயற்கை.

இயற்கையின் புத்தகமே யின்பாக நோக்கிற்,
பயக்கு மறிவுப் பழம்.

பேசாது பேசிப் பெருநல் லறிவுணர்த்தும்
ஆசா னியற்கையே யாம்.

கதிராற் கடன்முகந்து, கார்மேக நல்கி,
யிதஞ்செய் யியற்கையென் றாய்!

ஓசைப் படாம லொருகோடி யற்புதஞ்செய்
* தேசுற்ற சித்தாடுந் தாய்!

இயற்றுவ தெல்லா மியற்கையதைப் பற்றிப்
பயிற்றுக வாழ்வைப் பரிந்து.

---

* அழகொளிரும்

## ௪. உலகுயிர்.

ஒவ்வோ ருயிரு முலகின் வினைக்கணியாய்த்
தெய்வம் படைக்குமெனத் தேர்.

வினையளவே தோற்றம்; விமலனரு ளாலே,
யனைத்துயிரும் வீடடைத லாம்.

போக்கு வரவற்ற பூரணனைக் கூடுதற்கே,
*மீக்கூர்த்துச் செல்லுமுயிர் மேல்.

பெண்ணின்றி யாணில்லை; யாணின்றிப் பெண்ணில்லை;
எண்ணிருவர் சேர்ந்தே யிகம்.

வேறுபா டெல்லாம் விகற்ப மனமயக்காம்
† ஊறுபா டென்றுதறித் தள்.

---

* மென்மேலும் வளர்ச்சி பெற்று. Evolution.

† இடையூறு.

## ௨. உலகியல்

### ௫. உலகவாழ்வு.

தன்னியல் பாங்தெய்வத் தன்மை யறியாக்கால்,
என்னபய னிப்பிறவி யே.

*ஆட்சிபெற் றுள்ளே யகில விளையாட்டைக்
காட்சிபோற் கண்டு களி.

எத்தனையோ காரியங்க ளிந்த வினையுலகில்;
அத்தனையு மாடலெனக் காண்.

வினையுலகை யஞ்சாத வீரன்போல் வெல்க,
மனவுறுதி யாலே மகிழ்ந்து.

அகிலவாழ் வத்தனையு மான்மவிரி வாக
நிகழுவதே யுண்மை நிறைவு.

---

* ஆத்ம சித்திபெற்று.

## ௩. அறவியல்.

### க. அறம்.

தானு *நிறைவுற்றுத் தன்னவரு மின்புறுதற்
கானவொழுக் காறே அறம்.

† மன்னு மனச்சாட்சி மன்னவன்சொல் லென்னவெண
வுன்னி நடத்த லுயர்வு.

[செய்கின்ற
இவ்வழிச்செல் லென்றொன்றுள் ளெச்சரிக்கை
தவ்வழியி லச்சமறச் செல்.

அறமென் றறிந்ததனை யஞ்சாது செய்மின்;
இறைவனருள் காக்கு மினிது!

இறந்தபின் னெப்படியோ; இக்கண் ணுலகிற்
சிறந்த திருவினையைச் செய்.

* பரிபூரணம் பெற்று
† நிலையான.

க. அறவியல்.

## உ. அறவிரிவு.

எதேது காலத்திற் கேற்ற பொதுநலமோ,
வாதின்றி யாற்றி மகிழ்.

பழமை பழமையெனும் பல்லவியே பாடேல்;
புதுமைக்குப் புதுமைமுன் போ.

* மோகரிக மின்றி, முரணற்ற முன்னேற்றம்
நாகரிக மென்றே நவில்.

† தொடர்ந்தாரின் றுன்பந் துடைக்காத செல்வன்
கடமை வழுவியோன் காண்.

எதுதி தெனநோக்கி ‡ யெள்ளற்க; நன்மை
யதுபோற்ற லாற்ற லறிவு.

---

* மனமயக்கம்.

† தன்னைச் சேர்ந்தவர்.

‡ இகழாதே.

## ௩. அறத்தகுதி.

* போக்கும் வரவும் பொழுது மறியோமால்,
யாக்கையோ டேசெய் யறம்.

உண்ண வுடுக்க வுவந்திருக்க நன்முயற்சி
பண்ண லறவாழ்வின் பண்பு.

சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்
வீரனாய் வாழ விரும்பு.

உலகோ ரருட்குலமா யொன்றியினி தோங்கு
நலமார் † பொதுநிலையை நாட்டு.

உள்ளொளியிற் பூத்த வுயிர்வாழ்விற் சாதிமதச்
சள்ளையிலை சச்சரவில் லை.

---

* இறப்பு, மறுபிறப்பின் காலம்.
† சுத்தான்ம ஸமரஸம்.

௧. அறவியல்

## ௪. அறநெறி.

விண்ணின் விரிந்த *வியன்செய் யறநூலின்
உண்மை †யுடுவிற் பல.

அன்புண்மை யின்சொ லடக்கம், பொறுமையருள்,
இன்பப் பொதுநெறியென் றெண்.

கொலைபுலை, கூத்திக் குடிகளவு, சூதும்,
வலுத்த நரக வழி.

வசைசின வஞ்ச வழக்கற்றுத் தீய
நசையற்று, ‡நாணுற்று வாழ்.

§மூவழுக்கு நீங்குகவே ¶முத்தூய்மை யோங்கிநா
தேவர்குலம் வாழ்க, செழித்து!

---

* அற்புதமான.
† நட்சத்திரத்தினும்.
‡ வினயம், மரியாதை.
§ அகந்தை, மோகம், பாசம்.
¶ பேச்சு, நினைப்பு, செயலில் மாசின்மை.

## ரு. போதுநலம்.

பிறர்க்கென வாழும் பெரியபே ரின்பம்
* துறக்கச் சுகத்தி னினிது.

எத்துணை யெத்துணை யிவ்வுலகிற் கன்புசெயல்,
அத்துணை யான்ம விரிவு.

ஈசன் றிருமொழியை யெவ்வினர்தாஞ் சொன்னாலும்
ஆசையுட னேநீ யறி.

அற்பம் பெரியதென் றெண்ணும லன்புசெயு
நுட்ப வறிவுடைமை நோன்பு.

கீண்மேற் பிறர்தானுங் † கேண்மைதெவ் வொன்
காண்போன் கருணைக் கடல். [றெனவே

---

* விண்ணின்பம்.
† நண்பர், பகைவர்.

## ச. அறிவியல்.

### க. அறிவு.

அறவின்பம் வாழ்வி னழகின்ப மெல்லாம்
அறிவின்ப வூற்றி *னளி.

எங்குற்றே, மென்னசெய லெங்குசெல லென்றறி
†கங்குற் கடல்கடந் தோன் காண். [வோன்

போக்குவர வற்ற பொருளான்மா; நானதுவென்
றேக்கமற் றின்புற் றிரு.

யானு முலகு ‡மறிவுண்மை யின்பமயம்;
ஏனச்ச மென்றெண்ணிப் பார்.

நம்பு; நினைமுயல்; நாடொருமை; ஞானமாம்;
இன்பம் பெருகு மினிது.

---

* ஈகை.

† இருள்மடமை.

‡ சச்சிதானந்தமயம்.

## உ. கல்வி.

அறிவு தொழிலொழுக்க மாண்மை * பழகுந்
திறமான கல்வித் திரு.

இயற்கைவளந் தோங்கி, யியற்புலனைத் தூண்டும்,
இயல்பான கல்வி யினிது.

ஆற்றல் மிகவோங்கி யாளாக்குங் கல்வியினைப்
போற்றுக; வீரர் பொலிக!

மெய்ப்பு மறிவுடனே மேலா முறுதிபெறாப்
பொய்க்கல்வி யாலென் புகழ்?

ஈகையு ளீகையா மின்கல்வி; பெற்றவனுக்
கேகுழி யெங்கு † மிசை.

---

* காவியம் ஓவியம் போன்ற அழகுக்கலை.
† புகழ்.

## ௪. அறிவியல்.

### ௩. கற்றபயன்.

கற்ற வழியாற்றக் கற்றேனே கற்றேனும்;
மற்றவன் கற்ற மடம்.

அருளற்ற மூளை யடைத்தநூற் குப்பை
பொருளற்ற வெற்றுரையைப் போல்.

புலனைவென் றேனே புலவன்; மனப் பாட்டாற்
கலகலப்போன் பேச்சுக் கருவி.

வெள்ளத் தனைய விரிநூ லளந்தாலும்,
* உள்ளத் துணர்வே யுயர்வு.

கல்வியும் வாழ்வுங் கவியுஞ் சுவையும்போற்
புல்லுவதே செல்வப் பொலிவு.

---

* ஆன்ம வுணர்வு.

## ௪. ஆசான் — சீடன்.

ஆசா னருளு மழிவில் லருளொளியே
காசினிக் காகு முளக் கண்.

* வானும் விளைநிலனும் வாரிதியு மாமலைபோல்
ஞானகுரு செய்யு நலம்.

நாட்டிற் பெருந்தகையா † ரிளைவீ ரற்கறிவை
யூட்டினான் பெற்றோரி னாங்கு.

அழகுநிறை யாசானுக் கன்புடைமை யீந்து,
பழகிடலே நல்லறிவைப் பண்பு.

‡ நாடிப் பணிந்தோதி, நற்சேர்க்கைத் தொண்டுடனே,
சீடன்மெய் கற்றற் சிறப்பு.

---

* அறிவின் விரிவு; பொறுமை; ஆழ்ந்த பொருள்; மாண்பு.

† இனி வருங்காலம் நாட்டிற் குதவும் வீரர்.

‡ ஆசானிடம் விரும்பிச்சென்று.

## ௫. கலைவளர்ச்சி.

போற்றுக தாய்மொழியைப் பொன்போற் * புறநயங்க
ளேற்றுக நாளு மெழில்!

அருளறிவி னூறி, யழகிற் றவழ்ந்து,
பொருள்செழித்த பொற்கலையைப் போற்று.

பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்,
நாட்டிற்கு நல்ல பயன்.

கண்ணைக் கருத்தைக் கைநயத்தை யின்புறுத்தும்;
கண்போல † நுண்கலையைக் கா.

மெல்லியர்க்கு மென்கலைகள்; வீரத் திறனுண்மைக்
கெல்லார்க்கு மெண்ணெழுத்து ‡ மீ.

---

* பிறமொழிகளிற் காணும் புதுமைச் சுவைகளைத் தமிழிற் புகுத்துக.

† Fine Art

‡ வழங்கு.

## ரு. அன்பியல்.

### க. அன்பு.

அன்பே கடவுளா மன்பே யருஞ்சமயம்;
அன்பே யறிவிற் கணி.

அன்புள் ளிருந்தா லடவியிலு மச்சமிலை;
தன்போலுந் தங்குயிரெல் லாம்.

சுமையுமெளி தாகுஞ் சுடுபகைநட் பாகும்;
நமனும்போ மன்பை நயந்து.

பொன்புக ழாலல்ல; பூதவுட லாலில்லை;
யன்பைக்கொண் டாளை யறி.

தாயன்பு காட்டித் தமர்பிறரென் * றோரமிலான்
நேய னுலகிற்கே † நேர்.

---

* ஓரகம், பட்சபாதம் இல்லாத சமநோக்காளன்.
† சமானம்.

ரு. அன்பியல்

## உ. இனிமை.

இன்சொல்லி னில்லை யியம்பி * னிணங்காரின்
வன்சொல்லை மாற்று மருந்து.

கன்மீது கூர்செய்யுங் கத்திபோல், வன்சொல்லில்
இன்சொல்லைக் கூர்செய் யினிது.

விருப்பினிய சொல்லேயாம் வெம்பகைவன் கோப
நெருப்பை யவித்திடுநன் னீர்.

மாற்ற னிடும்பையெலா மன்னித்துத் தான்மறக்குஞ்
† சிற்றமிலான் சீரியனே தேர்.

தன்பிழையைப் போக்கிப் பிறர்செய் பிழைதாங்கி
யன்புசெய்வா னன்பர்க் கிறை.

---

* பகைவரின்.

† சினமற்றசாந்தன்.

## ௯. இன்னாத செய்யாமை.

இன்னாத செய்யாமை யென்னு மொழுக்கத்தில்
மன்னுயிர்க் கெல்லா மறை.

கொல்லேன் *விழையேன், குடிகளவுஞ் சூதெண்ணேன்,
பொய்யேனென் றேபுறுதி போற்று.

மனத்தி லிரக்கமிலா மக்களை † மாக்க
ளினத்தினுஞ் சேர்த்த லிழுக்கு.

கதறக்கொன் றானுண்ணுங் காதகர்க்கே தன்பு?
மதுவுண்பார்க் கேதே மதி?

கூற்று மிடுகாடுங் கூடிய மாக்களே,
நாற்றவுட லுண்ணு நரர்.

---

* பிறர்பொருளிற் காமுறேன்.

† விலங்குகளின்.

ரு. அன்பியல்

ச. நட்புரிமை.

மாணப் பெரியது மன்னோ, மயக்குலகில்,
ஆணவமில் லன்புத் தொடர்பு!

சீரியரின் கேண்மை சிறிது கிடைத்தாலும்,
ஆருயிர்க்கு நல்லமுத மாம்.

* இடித்துத் திருத்து மிணக்க மினிது;
கொடுத்தும்புன் கேண்மை கொடிது.

உடல்பொரு ளாவி யுதவியுங் கொள்க;
கடவுட் பெரியார் கழல்.

உயிரைக் கொடுத்து முயிர்பிரியா ருள்ளத்
துயிரோன்றி நட்டா ருறவு.

---

* கண்டித்து.

நஅ

## ரு. பொறுமை.

ஆற்றல் பொறையளவே யாகு மதுவுடையோன்
ஏற்றம் பெறுமெங்கு மெண்.

வாய்மை, பகையாமை, மாட்சி, மனப்பொறுமை,
காய்வானைக் காயும் படை.

பொறுமை புலிவெல்லும் புன்னகையால் * வாண்போற்
சிறுமைமீச் சீறி விழும்.

† கனகன்சேய் போன்ற கருத்துறுதி யோடு
வினைத்தீமை யைப்பொறுத்து வெல்.

அப்பரைப் போன்றவுள் ளன்புப் பொறுமைக்குத்
தெப்பமாங் கல்லுந் திரை.

* ஆகாச வாணம்போல

† இரணியன் மகன் பிரகலாதன்.

## ௯. நடையியல்.

### ௧. ஒழுக்கம்.

முகத்தில் விளங்கும் முறையான வாழ்வால்
அகப்பளிங்கி லாடு மொளி.

தெய்வ மிகழற்க; தேவரெதிர் சொல்லற்க;
பொய்புக லற்க; * புகழ்.

† தன்னடை போற்றுதான் சான்றாண்மை பேசுங்கால்,
மின்னைக் கரியெழுது மே.

குற்ற மிரங்கிக் குறையற் றெழுந்திருமின்;
அற்றே நடையோங்கு மாறு.

காலையெழுந் தாற்றுங் கடமை வழுவாதார்
மாலையிற் சேர்வார் மகிழ்வு.

* நற்புகழாகும்.

† தனக்குரிய ஒழுக்கத்தை.

## ௨. தீயன விலக்கல்

முரடர் துணையு முரண்பா டுடைத்தே;
* காடியீ யோட்டுங் கதை.

பேரைக் கெடுத்துப் பிணியோட்டும் வேசைவழிச்
சேராரைச் சேருந் திரு.

வேரோ டொழிக விலைவாழ்வு; வீட்டறத்திற்
சீரோடு பெண்டிர் சிறந்து;

† வட்டாஞ் சகுனி வலைப்பட் டிழந்தரசர்
கெட்டாரம் மாயங் கெடு.

நடையை, மதியை, நலத்தைக் கெடுக்குங்
குடியைக் கெடுக்குங் குடி.

* ஈயோட்டக் கல் எறிந்து நண்பன் மண்டை யுடைத்தது காடி.

† சூதாட்டம்.

## ௬. புன்மை விலக்கல்.

கோட்போய் புகன்று குளிரவோ, வுன்னுள்ளே
வாட்கொண் டறுக்கு * மனம்!

† காதலரை நாயின் கதைகட்டிச் சீரழித்த
பாதகரைப் பட்டென் றொழி.

தற்பெருமைத் தம்பட்டந் தானுள்ளே ‡ லொட
[லொட்டை;
அற்பர்மதி யாணவமுட் டை.

கற்கண்டு போற்பேசிக் காணாது தீவைப்பார்,
மற்கொண்ட மாற்றாரிற் கேடு.

எள்ளி யிழித்த லிரத்தல், பிறர்பொருளைக்
கொள்ளைகொளல் புல்லர் குணம்.

* மனச்சாட்சி.

† மனைவி முன்பிறப்பில் நாய், கணவன் உப்புக் குறவன் என்று பொய் கட்டிக் காதலரைப் பிரித்த குடிகேடி போன்றார்.

‡ வெறுமை.

## ச. வாய்மை.

தூய்மையும் வாய்மையுந் தோழ ரவர்நட்பு
வாய்ந்தவர்வாழ் வின்ப வனம்.

இப்பொய்யே யின்றுரைத்தோ மென்று வருந்தியுட
னப்பொய்விட் டுண்மை யணி.

பயனுள்ள சொல்லும்; பழிபகையே சாது;
நயனுள்ள நாவி னியல்பு.

பக்குவத்திற் கேற்ற பயனுரையே பேசிடுக;
மிக்குரையா மோனம் விரும்பு.

புறத்தூய்மை செய்யும் புனலைப்போ லுண்மை
மனத்தூய்மை செய்யு மருந்து.

## ரு. விந்தடக்கம்.

சிந்தை யடக்கிச் சிறுபுலனின் போக்கடக்கி,
விந்தை யடக்கிவளர் வீறு.

பிரமச் சரியம் பிழையின்றிப் போற்றின்,
அரிய பயனெல்லா மாம்.

ஆற்ற லறிவாயு ளாக்கைநல வாழ்வின்ப
ஆற்றுகும் விந்துன் னுயிர்.

ஆண்பெண் விலக்கில்லை; யாண்மைப் பொதுவுறவு
பூணுக நீங்கும் * புரை.

†வன்னியாய்க் கற்ற வலிவுடையார் போற்றுகவே,
நன்மனை வாழ்க்கை நயம்.

* மனவிகாரப்பிழை.

† பிரமச்சாரியாக,

## எ. இல்லறவியல்.

### க. இல்லறம்.

வீட்டின் விரிவே வியனுலக மாதலினல்,
வீட்டறத்தில் வெற்றி விளக்கு.

இல்லற மீசனரு ளெய்திய நல்லறமஃ
தில்லே லுலகில்லே யெண்.

இல்லறமே வீட்டின்பம்; இல்லாளு நல்வாழ்வும்
* புல்லித் தழைக்கும் புகழ்.

நல்லாளேக் காதலித்து, † நம்பிநனி வாழ்க,
வள்ளுவரும் வாசுகியும் போல்.

பூவோடு பொன்போற் பொருந்தி யறிவொளிரும்
ஆனோடு பெண்சக்தி யாம்.

* சேர்ந்து கலந்து.

† ஆண்மையிற் சிறந்தோன்.

## உ. திருமணம்.

காந்த வடக்குமுனை தெற்கைக் கவர்வதுபோல்,
மாந்தருள் ஆண்பெண் மயக்கு.

காதல் மணமே கருத்திற் கினியமணம்;
வாதாம் வலுமணமெல் லாம்.

நல்ல குணமணியாய் * நாணுடுத்த பெண்மணமுறைதக்
கொள்ளுக வாழக் குறித்து.

† அட்ட லழகுசெய லாண்டகையைப் பின்புறுத்தல்,
கற்றலும் பெண்டிர் கடன்.

கற்புயிர்; நாணழகு; காரிகைக்கு நற்கணவன்
சொற்படித லாகுஞ் சுகம்.

* அடக்கம், அமைதி, மட்டுமரியாதை.
† சமைத்தல்.

## ௯. பெண்ணின் பெருமை.

மென்மை யுடலின்ப, * மேதக்க வாழ்வணியிற்
பெண்மையி னுண்டோ பிற?

வாழ்க்கைத் துணையும், வகையும் விரிநலமும்
† ஆக்கமும் பெண்சக்தி யாம்.

அறமன்பு ‡ மைங்கடனு மாற்றிடலுக் காதி,
நிறைமனைவி யாகு நினை.

பகட்டவணி கொள்ளாள்; பதிக்கணி யாவாள்;
அகத்திற்கு நல்லணியே யாம்.

பெண்ணிற் பிறங்கும் § பெருங்கனலைப் புல்லினுல்,
மண்வாழ்வு மண்கலவின் னும்.

---

* சீர்சிறந்த.

† செல்வச்செழிப்பு.

‡ அறங்காத்தல், ஆருயிர்க்கன்பு, அறிவை வளர்த்தல், பொதுநலம் புரிதல், இறையடி பணிதல்.

§ குண்டலி சக்தி.

எ. இல்லறவியல்

ச. ஆண்மை.

* ஈட்டிமனை போற்ற, விசைபெருக நல்லறங்க
ளாற்றலு மாண்மைக் கழகு.

இல்லாளோ டன்புற் றிணங்கி, யறம்வளர்க்கு
நல்லாள னில்லாள னும்.

மனைவியுடன் காதலாம்; மக்களுட னன்பாம்;
அனைவரொடுந் தண்ணருளே † யாம்.

தக்க மனையிருக்கச் சாந்தயலைச் சேரழிவான்
கக்கலை யுண்ணுங் கடை.

கண்ணொத்த வீட்டிற் கனமொத்து மங்கலமாம்,
மண்ணொத்த வான்பயிரைப் போல்.

---

* தொழிலால் சம்பாதித்து.

† இன்பமாகும்.

## ௫. காதலின்பம்

குலமோங்கு சக்திக் * கொழுந்தோங்குங் காதல்
நலமோங்க நிலமோங்கு நாள்.

ஈதலிற் காதற் கிணையில்லை; தன்முகிலும்
† வாதத்தான் மாறு படும்.

புண்ணுற்று, மோகப் புணர்வுற்று கொந்தழியுங்
கண்ணுற்ற காமக் கடா.

பெண்ணைப் பழிக்காதே; பெண்ணை யிழிக்காதே;
பெண்ணைப் பெருமைப் படுத்து.

காத லுலகாக்குங் கனலதனை யீசன்பால்
ஈதலே யின்பமென் றெண்.

---

* சுவாலை.

† காற்றால்.

## அ. குலவியல்.

### க. தாய்.

எல்லார்க்கு மோரன்னை, யீச னருளன்னை,
எல்லாரு மோர்குலமென் றெண்.

தாய்சக்தி வாழியநீ தங்கக் குழந்தைகளால்
தேயம் வளர்க்குந் திரு.

தாய்மாரின் கண்ணருக் தன்னாட்டின் சீர்மையெலாஞ்
சேய்வடி வாகச் செறிந்து.

வீர மகனையே யீன்றெடுத்த மெல்லியட்கு,
வேறுதவ மேனோ விளம்பு?

சோறூட்டும் போதன்பாய்ச் சொல்லிவாழ் வின்கடமை
வீரத்தா யூட்டும் * விருப்பு.

---

* குழந்தைகளும் வீரர்களாக வாழவேண்டும் என்ற விருப்பம்.

## ௨. தாய்ப்பணி

சாவையுஞ் * சாடியெங் தாயின் பணிபுரிவோம்;
ஆவியீங் தாளுக் கது.

அன்னை கொடுத்தவுட லன்னை கொடுத்தவுயிர்
அன்னை யருட்பணிக்கே யாம்.

† மழைத்து விளைநிலமு மன்னுயிரும் வாழ்வுந்
தழைத்தது தாயன்பாற் றன்.

அன்போடு கொஞ்சி யமுதிட்ட பொற்கையைப்
பின்பற்றி முன்னேறு வாம்.

தாய்சொல்லு மம்மொழியே தன்மக்க ளுஞ்சொல்வர்;
தாய்நன்று சொல்லத் தரும்.

---

* வீழ்த்தி.

† மழை செழித்து.

## க. தந்தை.

தந்தை செயலே தனயன் செயலாகுந்
தந்தைக் கொழுக்கந் தலை.

சுற்றம் புலன்வழியே தோய்ந்து மனம்பற்றும் ;
சுற்றத்தைச் சுத்தமுறத் துன்.

பெற்றோருங் கூடப் பிறந்தோருஞ் சுற்றமென
* உற்றமனை நாடுலகு † முன்.

குலனென் றணங்குங் ‡ குரிசிலும் பொன்செய்
நிலனும் விளைதபு நிகர்.

அறிவுந் திருவும், அறநெறியு மன்புந்
திறனும் பெருகுகவுன் சேய்!

---

* வாழ்வின்பத்திற்கு அமைந்த.
† உன் = கருது.
‡ ஆணிற் சிறந்தோன்.

## ச. சேய்.

இன்றுசேய் நாளையே யிப்புவியின் கையாகும்
என்றுசேய் போற்ற விசை.

இல்விளக் காகு * மினியர் நனியோங்கக்
கல்வியறி வாற்றலாங் கண்.

நன்மக்க ளின்பெருமை நாடு, குலப்பெருமை ;
வன்மக்கள் வீட்டின் வசை.

தாராட்டிச் சீராட்டிப் பாராட்டி னோர்மேல்வை
மாறாட்ட மில்லா மனம்.

இளமையிலே பெற்றோ ரியற்றியதை மைந்தர்
† முதுமையிலே செய்யன் முறை.

* இனியமக்கள்.

† பெற்றோரின் வயோதிகத்தில்.

## ரு. சுற்றம்.

நல்ல துணைநின்று நன்றி மறவாதான்,
எல்லார்க்கு மின்னுறவென் றெண்.

பாகத்தி லல்ல; பரிந்த வுதவியினில்
* தேகத் துணைவனைநீ தேடு.

† கிளையுரிமை கொண்டாடிக் கேடுசூழ் வாரைத்
தலையரிக்கும் பேயென்னத் தள்.

இரத்தக் கலப்பெனினு மின்னுமை செய்தக்கால்
அத்தகையா ராரோ வறி.

நன்னேக்கங் கொண்டுமனை நாடுய்ய வாழ்ந்திடலே
முன்னேர்க்குச் செய்யு ‡ முறை.

* சகோதரனை.
† சொந்தம், பந்து என்ற பாத்தியம்.
‡ கடன்முறை.

## ௬. பிழைப்பு.

தேவை யறிந்து, திருவுடனே பொன்செய்து,
* பூவையறிந் தில்லம் புரி.

கடன்செய் பகட்டுக் கவலைவிலங் காகும்;
இடம்பம் வறுமைக் கெளிது.

வீணணி, யாடை, விருந்து மணச்செலவு,
† காணுமை யின்கருவி காண்.

மடவாய்நீர் போல வழிந்துபோம் செல்வம்;
‡ உடையார் தருக வுவந்து.

திருநாள், § பெருநாள், || கருநாட் செலவு
¶ வருநாளைப் போற்றி வழங்கு.

* உலக நலம். † வறுமை. ‡ செல்வர்.
§ நாட்டுத் திருவிழா || துக்கங்கொண்டாடும்நாள்
¶ வருங்கால நிலைமையறிந்து.

அ. குலவியல்

## எ. குலநலம்.

நிலநலத்தை வேண்டி, நிறைமுறையாம் வாழ்வாற்
குலநலத்தைப் போற்றக் குறி.

பசிக்குத் தொழிலும், பரமனடி நெஞ்சும்,
இசைக்கோர் வியன்செயலு மென்.

அச்ச மடிமை யகந்தை யிருள்வறுமை,
யிச்சகத்தைக் கொல்லு மெமன்.

இன்றபடித் தின்றெமன் வாய்ச்சென்றுபடல் வாழ்வல்ல
பன்றிக்கு மஃதாம் பயன்.

வின்மையும் வேண்டா வெறுமைபு மில்லாமல்,
மாண்புபெற வாழ்வாங்கு வாழ்.

## கூ. தொழிலியல்.

### க. முயற்சி.

முயல்க, முயல்க, முயல்கமென் மேலும்
பயன்களைவைத் தீசன் பதம்.

தங்கு முயற்சியாற் சாராத தொன்றில்லை;
* கங்கை கொணர்ந்தோன் † கரி.

முயற்சிக்குச் சீதேவி முத்துநகை; சோம்பும்
அயர்ச்சிக்கு மூதேவி யாள்.

எதாயினு மொன்றை யியற்புலமை கொண்டறிந்து,
மூதுலகம் வாழ முயல்.

அவலப் படுவினையி லாற்றலைப் போக்கல்,
* உவர்நட்டு நீர்பாய்ச்ச லொப்பு.

* பகீரதன்.
† சாட்சி.
‡ உவர்நிலம்.

## ௨. வினைவழிபாடு.

முடிக்குந் திறனில்லேல், முந்திரா தென்னுதே;
அடக்கம் அமைதிக் கணி.

உழைத்த வுணவை யுவந்துசுவைத் துண்க;
வழுத்தி வழிபட் டுளம்.

*மாமனிதன் றேவென்னும் வாழ்க்கைப் படிகளுள;
தாம்செய் வினையே தரும்.

தேவர் நரகருஞ் செய்யும் வினையாலே
யாவ ரிதனை யறி.

வையமெலாஞ் சிற்சபைநல் வாழ்வெல்லாம் வேள்வி;
செய்வதெலாந் தெய்வச் செயல்.

* மனிதனில் விலக்கு, வீரமனிதன், தேவன்.

## ௩. தொண்டு.

நல்வேலை யேசூழ நாளு மிருப்பாயேற்,
பொல்லா வினையெல்லாம் போம்.

தொண்டா லுறுமகிழ்வே தொல்புவியுஞ் செய்தோனும்,
அண்டரும் போற்று மமிழ்து.

அருட்பணிசெய் யின்ப மமுதமாம்; பொல்லா
இருட்பணி நஞ்சா மிடர்.

நாட்டி னடிமையு * நல்குரவு நீக்கிடலே,
வீட்டைத் தருமாம் விரும்பு.

ஒருண்மை தேர்ந்திங் குலகுய்யத் தொண்டாற்றி,
யீருலகு மெய்தி யிரு.

* வறுமை.

௬. தொழிலியல்

௪. நலிவறல்.

பசியு * நசையறு பட்டாலிப் பூவே
வசையறுந் தோக்கிடும் வான்.

இவ்வுலகைப் போற்றி யியல்பான நல்லறஞ்செய்;
அவ்வுலகி னின்பமேலா மாம்.

† இளைத்தோர்க் குணவு, ‡ மியன்றோருக் கீகை
பழுத்தா லொழியும் பழுது.

நாட்டில் விளைபொருளை நாட்டார் நலம்பெறவே
யிட்டு முயற்சி யினிது.

§ இன்மை, மடமை யிரண்டும் ¶ பா பாசுரன்கை;
நன்மைவிழுங் காது நலி.

* துராசை. † பசிவருந்தும் ஏழைகள்.
‡ செயலுள்ள செல்வர். § வறுமை.
¶ பாபமென்னும் சுபந்தன் கைகள்.

## ௫. கைத்தொழில்.

கைத்தொழி லொன்றற்றார் கையிருந்துங் கையற்றார்;
மெய்த்தொழிலின் வேர்வையெலாம் பொன்.

குடிசைத் தொழிலாற் குறையற்று, நாட்டில்
அடிசிலுடை செல்வமெலா மாம்.

* ஆற்றலைப் போக்கி யடிமைப் படுத்திடுமே
போற்றுதல் போலப் * பொறி.

பொறியா லொருவன் பொருள்குவிப்பான்; ஏழை
வறுமை யுறுவான் மடி.

அயற்பொறி தேயத்தி னாக்கத்தை யெல்லாந்
† தாயிலுறுத்திக் கொள்ளுந் துணிந்து.

* மனித சக்தியை.
† யந்திரம்.
‡ சோம்பலீந்து.

கூ. தொழிலியல்

## க. வேளாண்மை.

ஏரோசை பாருக் கிதயத் துடிப்பு; நூற்
போரோசை யோங்காரம் போல்.

சொற்போரும் விற்போரும் பொற்போருஞ் சோருமே,
நெற்போரோன் றில்லா நெறி.

ஒருபயி ராக்கி யுணவீவான் பாரிற்
பெருமக னென்றவனைப் பேசு.

பயிர்செய்வான் வாழ்க்கையே பாங்குமற் றெல்லாம்
அயல்சார்ந்த வாழ்வென் றறி.

உழைத்துவிளைத் துண்ண வுவந்தா னுலகுஞ்
செழிப்பு செழிப்பே செயும்.

## எ. உழைப்பு.

செய்புங் கிணறுஞ் சிறுகுடிலுங் * கால்நடையுங்
கையுழைப்பு மீயுங் களிப்பு.

நூற்றுத் தறிநெய்து, நூலறிந்து, மண்ணுழுது,
காற்றுட வாழக் களிப்பு.

† மண்சரண்டி புண்ணுதார் வறுமையோ வென்றழுவார்,
கண்ணிருந்துங் கையிருந்து மேன்?

கட்கஞ்சாத் தீயிலைகள், காப்பி விளைக்காதே;
நற்பயிர்செய் யுண்டுடுக்க நாடு.

புகையிலை கஞ்சாபோற் பொல்லாதன வாக்கேல்;
பகைமதுவுன் பாரேலிப் பார்.

---

* நிலத்தை உழுது.

## ௯. தொழிலியல்

### அ. பிழைப்பு.

பாடுபட் டோருக்குப் பாட்டின் பயனெய்த,
நாடுவிட் டோடு நலிவு.

விளைவிப்பான், வாங்குவோன், வேறிடையோன்
உழைப்பாளிக் கோங்கும் பிழைப்பு. [றில்லேல்,

தன்னியலுக் கேற்றபடி, * தாளாண்மை, வேளாண்மை
பண்ணுக தீமை படும்.

கூலி குறைத்தாற் குலங்குறையும்; தொண்டாளர்
ஞாலவாழ் விற்கு நரம்பு.

புவித்தாய் தரும்பயனைப் போதிய மட்டும்
அவரவர் துய்த்த லறம்.

---

* அறிவும் உடலுங்கொண்டு உழைத்தல்.

## ௬௰. பணம்.

ஆயிரம்பேர்க் காகு மிடத்தை யடைத்தொருவன்
தீயதுசெய் துண்ணுவதைத் தீர்.

பணஞ்செய் படர்நீங்கிப் பண்டமாற் றேங்கின்
மணஞ்செய்யு நாட்டின் வளம்.

பணத்தா லுலகு படுதுயரைப் பார்மின்,
குணத்தோரும் வீழுங் குழி!

கைதந்து பொல்லாக் காரியங்க ளைத்தூண்டும்
பைகட்டும் பாவிப் பணம்.

சிலருக்குச் செல்வச் செருக்கீந்து, நல்லார்
பலரை வருத்தும் பணம்.

## கூ. தொழிலியல்

### கம. செய்வகை.

இயற்றுக கால மிடம்வகை தேர்ந்தே;
பயனும் பருவமழை போல்.

காக்கையிடம் பாட்டைக் கரக்குங் குயிலெனநல்
லாக்கத் தடங்கி முயல்.

பின்னு வதனைப் பெரிதுங் கருதியே,
முன்னோர் வினையை முயல்.

தாய்மொழியுந் தன்னாட்டுந் தாய்நாடுந் தண்ணருளும்
வாய்மையறி வின்பொளிர வாழ்!

ஓய்வணக்க மென்ன வுயர்ந்தோ ரடிபணிக;
போமகந்தை; புண்ணியங்க ளாம்.

## கக. வினைவெற்றி.

சங்கடம் போன்று, சயமாந் திருவினைகள்;
* கங்குன் முதிரக் கதிர்.

சொல்லிற் குறைபோலத் தோன்றி நிறைபெறுமே:
பல்லுயிர் வாழும் பணி.

மலர்மெத்தை மீதல்ல; † வாண்மீது சென்றே,
பலர்நன்மை செய்தாரிப் பார்.

துணிந்துமுன் செல்க; துயர்க்குலந் தானே
பணிந்துவெற் றிக்காம் படி.

ஆருயிர்கட் கன்புற் றருள்வலிவால் வெற்றிபெறுஞ்
சீருயர்ந்த தெய்வப் பணி.

---

* இரவு முதிர்ந்தால் பகல்.
† பகைவர் வாளையும் பொறுத்து வருந்தி.

## கம. வானரசியல்.

### க. தலைமை.

பாருலக மெங்கெங்கும் பாரோ ருரிமையலால்,
ஓரோ ருரிமையோ வோர்.

மனிதனுக் கில்லை மனித னடிமை;
அனைத்தும்வல் லானுக்கே யாள்.

குடியிற் குடியாய்க் குடியோத்துக் கோல்செய்,
நடுநிலை யாட்சி நலம்.

அறங்காக்கும் வீறு மறிவழகும் வெற்றித்
திறங்காக்கு மன்னன் றிரு.

உண்மையே திண்மை; யுலகி லறமோங்கு
நன்மையே நாடாள்வான் சீர்.

## உ. தேர்ச்சி.

குடிகளே தேர்ந்திதமாய்க் கொண்டவனே கொற்றன்.
நடுநிலைசேர் நாட்டத்தி னன்.

தான முயர்செல்லச் சனசேவை யின்பொறுப்பு
மாணப் பெருக மதி.

ஆராய்ந்து போற்றி யனைவோருந் தேர்ந்தெடுத்த
தாராளர் பாராள ராம்.

பொதுநலமே தன்னலமாம் புண்ணியரைத் தேர்ந்தால்,
இதமாகு நாட்டிற்கெல் லாம்.

தேர்ந்தோர் மனத்தின் றிறமே யரசதனால்,
தேர்தலிற் றன்மை தெரி.

## ௩. நல்லாட்சி

தொத்தடிமை யின்மை, துயர்செய் முரணின்மை,
உத்தமனுள் ஊருக் கிலக்கு.

* சிற்றூரிற் † றேயங் தெரியுந் திறத்துடனே,
வற்று நிறைவு வழங்கு.

பார்தழுவிப் பஞ்சம் ‡ பகையிருணோ யச்சமறச்
சீர்வழியிற் செங்கோன்மை செய்.

வறுமையற நற்றொழிலும், வாய்மை யறிவும்,
முறைமையுறத் தந்துதவு முன்.

ஒளிசெய்புங் கல்வி யுலகிலெல் லார்க்கும்
எளிதெய்தச் செய்த லினிது.

---

* கிராமத்தில்.

† நாட்டின் நல்லமைப்பு.

‡ ஆன்ம முன்னேற்றத்தின் பகைவர், மடமை உடல் மன நோய்கள்.

## ச. வரவு செலவு.

கல்வி தொழிற்சுகமுங் காப்புநல முங்கருதி
நல்குவரி *வான்போல் வழங்கு.

தேவைக்கு மேலான செல்வர் திறைவாங்கித்
தேவையறத் தேசநலஞ் செய்.

எவரெவ ரெத்திறத்த ரென்றுய்ந்து போற்றி,
யவர்திறமை யாற்பிழைக்கச் செய்.

மனங்கொண் டறவழியில் மாந்த ரொழுகிற்
கனங்கொள் படைச்செலவேன் காட்டு.

கூரை பிடுங்கிக் குளிர்காய் வதுபோலும்,
பாரைப் பிடுங்கும் பரிசு,

---

* மேகம் கடல்முகந்து உலகிற்கே பொழிவதுபோல.

## ௫. படை.

நயத்தா லரசாள நாடாதா *னூர்க்குப்
பயத்தாற் படைகொள்வ தென்?

அசையா வுறுதி யறங்கொண் டெதிர்த்தால்,
தசைவலி தாழ்ந்து படும்.

படையாலே யென்னாகும் பாரொன்று சேரிற்
கொடையன்பு கைக்கொள்ளாக் கால்?

இன்றுவாள் வென்றதனை யின்னொருவாள் வெல்லுவதே
என்றுமிம் மண்ணு ளியல்பு.

பார்மனம் பற்றிப் பரிவுடனே நாடாள்க;
போர்வெறிகள் போக்கற்றுப் போம்.

* ஊரை அஞ்சி.

## ௬. வெம்மை விலக்கல்.

காலைபோற் செய்யதிருக் காவலன் சீர்த்தியாம்.
மாலைபோல் வெய்யோன் வனப்பு.

கோதேறி ஞனேறுங் கொற்ற நெடுஞ்செருக்கு,
மீதேறுங் கற்போல் விழும்.

நடுக்கி யடக்கிடவே நாளும்போ ராட்டம்;
அடுத்துத் தரவமைதி யாம்.

பாரொத்து வாழான் படைச்செருக்கே தன்னரசின்
வேருக்குக் கூரியவெவ் வாள்.

அச்ச மகந்தைவிட் டன்புண்மை பூணரசிற்
கெச்சமயத் தாரே யிகல்?

## எ. சட்டதிட்டம்.

கட்டுக் கடங்கிக் கடமையினி தோங்கிடவே,
சட்ட மியற்றத் தகை.

அதிகார மாட்டா யதிகஞ் சுயேச்சை,
விதிசிலவா மாட்சி விரும்பு.

வித்தக நல்லோர், விதந்தெரிந்த மேலோர்,
ஒத்துழைத்த லென்று முயர்வு.

* ஐக்க வணியி லவைசேர்த் தறிவன்பர்,
மந்திரத்தி னுறுமுறை மாண்பு,

அறவோர் தொழிற்புலவர் அஞ்சாத வீரர்
அறிவாளர் நாட்டிற் கணி.

---

* பஞ்சாயத்து முறையில்.

## அ. நாட்டன்பு.

வீடுகளி னீட்டம் விரிநாடா மாதலினால்,
வீடென்றே நாட்டை விரும்பு,

வளமறிவு வீரம், வளரிசையு மாந்தர்
உளமகிழ்வு மோங்கியது நாடு.

நாந்திருந்தி மேலோங்க, நாடுந் திருவோங்கும்;
தாந்தாந் திருந்தற் றலை.

அன்னையன் புக்கனலை யாவிதொறு மூட்டிடுவோம்.
பின்னே திருளச்சப் பேய்?

எந்தா யருட்பணிசெய் யின்பத்தி னின்பமிலை;
இந்திரபோ கங்களெடக் கெள்.

## ௬. மக்கள் கடமை.

ஆற்றப் பொறுத்துநல் லன்போ டறங்காத்தல்
மாற்றுனை மாற்று மருந்து.

இக்கணமோ பின்னோ விறக்குமுட லான்மாபோற்
றுக்கம் விளையேற் றுணிந்து.

நல்லொழுக் காறு நடந்து நவைநீங்கிப்
பொல்லது போகப் புரி.

பணிந்து நடக்கை பயன்பலவாம்; வீரர்
துணிந்து நடக்கையினைப் போல்.

வெற்றிபெற வாழுதலும் வீட்டுநலந் தாங்குதலுங்
கற்றறிந்த மக்கள் கடன்.

## கஷ. ஒற்றுமை.

ஒற்றுமையி னற்றே யுயர்வெற்றி; யஃதொன்றைப்
பற்றுநா டேதே பகை.

உள்ளொன்றி ஞலே யுலகொன்று மாதலிஞல்,
உள்ளத்தி லொற்றுமையை யூன்று.

பார்த்தால் மனத்தாற் பலவா மொருசக்தி
போர்த்தா டியற்கைப் புவி.

மானிடர் தெய்வத் திருக்கூட்ட மாய்வாழ்க
ஆன்மவொருப் பாட்டுரிமை யால்.

மாசற்ற வுள்ளமெலா மாலையாய்க் கோத்தணிவோம்
ஈசன் றிருமார்பி லே.

## கக. யோக சக்தியியல்

### க. சக்தி. *

சக்தியே முக்திபரா சக்தியே யின்பமருட்
சக்தியே சித்தியெனச் சாற்று.

† ஓம்சுத்த சக்தியென வுள்ளே யுயிர்த்திடுக;
அச்சித்தி சக்தியரு ளால்.

கூற்றைவென் றேங்குங் ‡குகைக்கனலைத் தூண்டுகவே
மாற்றிப் பிறக்கும் வகை.

சக்திக் கதிர்வீசிச் சகமொளிர வாழ்ந்திடலே
சுத்தான்ம சித்தியெனச் சொல்.

மதிநீ, வழிநீயே! வாழியறத் தாயே!
கதிரின்றிக் காணுமோ கண்?

---

* கடவுளின் அருளறிவாற்றலே சக்தி. கதிரவன் கடவுளானால், கதிர் சக்தி.

† ஓம்=அ+உ+ம்=அறிவு, உண்மை, இன்பம். சத்தம்=சுத்தான்மா, சுத்தப்ரம்மம். சக்தி அவனருள் சகுணம், அருள்வடிவம்.

‡ இதயகுகையிலுள்ள சுத்தான்மக் கனல்.

## உ. ஸஹஸ்ராரசித்தி.

*வெண்டா மரையில் விளைதே னறிவருளால்
உண்டார்க்கு முண்டோ பசி?

கூற்றஞ்சி யோடுங் குலகுண் டலியுச்சிக்
கேற்றுக †முக்கண் ணிடம்.

ஆறுருவி ‡யேழேறி யானந்தத் தேனுண்ணும்
சீறியெழு மாதாரத் தீ.

கற்பூர தீபம்போற் காந்து முடலுயிரும்,
சிற்கனலை யேற்றச் சிரம்.

ஊற்றைப்போற் பொங்கி யுலகைச் செழிப்பிக்கும்;
ஆற்றைப்போற் பாயு மருள்.

---

*ஸஹஸ்ராரத்திலுள்ள மதிமண்டலத்தேன்.

†சூரியசோமாக்கினிகள்

‡மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கள்.

§ஸஹஸ்ராரம்

## கக. யோக சக்தியியல்

### ரு. தியானம்.

பென்னூற்றிற் பூத்தப் பொலிவெண் மரைவைகும்,
*அன்னமென் றன்னை யறி.

†நினைத்து நினைத்து ‡நினைப்பற்றுள் ளத்தே,
நினைப்பற்றி நீயாகி நில்.

சிதையாம லெண்ணித் தெளிந்த தனிமை
அதுநானென் றேயுணர்த லாம்.

எழுந்து விழுந்து மிடத்தமர்முந் நீர்போல்§
அழுந்தியுன் னுள்ளே யமர்.

அமைதித்தெள் ளூற்றி லறிவன்னம் போலச்
சமைதைபெறுந் தன்னிலையைச் சார்.

---

* சுத்தாத்மஹம்ஸம்

† தியானித்து

‡ சங்கற்பமற்று

§ முந்நீர் = கடல்

## ச. உடலுறுதி.

உடலுறுதி செய்க; வுடலைப் பொலிவு செய்க;
உடல முயிர்க்கு மனைவி.

அற்றுப் பசிகண் டளந்துண் டியல்வழியில்;
குற்றமுறு தான் குடில்.

தூயுணவு, தூயுறவு, தூயமனத் தூயர்க்குக்
காயமுங் கண்ணடி யாம்.

*எக்கிக் குலுக்க †விரைப்பை ‡குடல்கழுவல்,
§பத்திருக்கை மெத்தப் பயில்.

தீயமனத் தாலுந் திருவற்ற வாழ்வாலும்,
நோய்பிறக்கு மென்றே நவில்.

---

* நௌலி

† தௌதி

‡ பஸ்தி, எனிமா

§ 10 யோகாஸனங்கள்:- மதுரம், சிரசு, மயூரம், சர்வாங்கம்; பச்சமோத்தானம், குக்குடம், ஹலம், மச்சம், நவாசனம், சவாசனம்.

கக. யோக சக்தியியல்

## ரு. இயற்சிகிச்சை.

பூத வுடலுக்கைம் பூதமே நன்மருந்தாம்;
தாதைகதிர்; தாயாகுந் தண்.

தண்கதிர்மண், காற்றனலுங், காய்கனியும் பட்டினியும்,
வண்மை யியற்கை மருந்து.

உண்ணாமை மாற்று முடற்பிணியை; வெண்கதிருந்
தண்ணாம் வலிமை தரும்.

உண்ணா விரத முடலின் பிணிபோக்கித்
திண்கருத்து மீயுந் திறம்.

தூயவுடை யூணுக் *தகளறவாழ் வுங்கொள்க;
நோயேன் மருந்துமே னோ?

---

*குற்றமற்ற அறவாழ்வு

## ௯. மனவெற்றி.

சினத்துடனே மண்ணைச் செயிப்பதினுந் தத்தம்
மனமடக்கி வாழுதலே மாண்பு.

சுற்றும்பேய் நெஞ்சைச் சுருக்கிச் சுகவழியே,
பற்றற்று நிற்கப் பயில்.

நிலைத்த மனமே *நிலைபெறும்; ஆசை
யலைத்த திடர்க்கடலே யாம்.

நிலைக்கு நலநாடி நீளவா தாண்டி,
அலைக்கு மனத்தை யடக்கு.

நினைப்பி னுருவே நிசமாகு; நல்ல
நினைப்பு தனையே நினை.

---

*மோட்சம்

## கக. யோக சக்தியியல்

### எ. சித்தவுறுதி.

வந்ததையும் போனதையும் வாதனைப்பட் டெண்ணாதே;
சிந்தையலை யாதிருக்கச் செய்.

இன்பத்தி லின்ப மெனைத்துங்கட் டின்மை;
துன்பத்துட் டுன்பந் *தொடுக்கு.

ஒன்றினை யொன்றலே யோகம்; அலைமனத்தை
வென்றிடத் தோன்றின் விளைவு.

†இழுத்தடக்கி விட்ட லிரண்டெட்டு நான்கு;
பழக மனமடங்கும் பார்.

தினி முயக்கினிலே செல்லாதுன் வாணாட்கள்
ஞான முயற்சிவழி நாடு.

---

*பந்தம்

† பூரகம் 2: கும்பகம் 8: ரேசகம் 4 கொண்டபிராணாயாமம்.

தர்மஸாதனம்.

அ. மௌனம்.

வாய்ப்பேச் சடக்க மனமடங்கி, நாடியாழ்
பாய்ச்சும் பரநாதப் பண்.

செவிப்ப செவித்தபின், சிந்தித்துச் சித்தங்
குவிப்பது *கற்பின் குறி.

இரவுபக லின்றி †மெரிமுச் சுடரிற்
பரமான்ம நூலைப் படி.

வாயடங்க, நெஞ்சடங்க, மௌனமே மந்திரமாம்;
சேயடங்கத் தாய்வரவு, போல்.

தானைக் கூடுந் தலைவன்முன் பேச்சடங்கும்
ஆனந்த மோன மது.

---

* கற்கும் கல்வி

† ஸஹஸ்ராரத்தில் விளங்கும் சோமசூர்யாக்னி

## ௬. சாகாக்கலை.

*என்று மிருப்பதனி லென்று மிருப்பதுவே,
யென்று மிருக்கும் வகை.

பிறப்பிறப் பில்லாப் பெருமைபெற வேண்டின்
மறப்பறவுள் ளூன்று மனம்.

தேகாதிக் கெட்டாத சிற்சுக்மெய் வாழ்வே,
சாகாத சக்திக் கலை.

கூற்றையுதைத் தாடுங் கொழுந்தடியைப் பற்றுகவே,
மாற்றறுபொன் மன்னுடல மாம்.

எப்போது †மெண்ணி யிருப்பார்க் கியலுண்மை
தப்பாது வீசுங் கனல்.

---

* ஆன்மா

† தியானித்து

## ௪0. கூற்றஞ்சாமை.

வாவென்னும்; வந்தால், மனைமக்க ளைப்பிரியேன்,
சாவேபோ வென்னுஞ் சகம்.

மாரடிப்பு வேண்டாம்; மகிழ்மினோ விட்டுடலைப்
போரொழிந்து போனவுயிர் போற்றி.

புதுமெய் வருமகிழ்வே *பொன்றலி லல்லால்,
எதுவெகுளிக் கேசொல் லிடம்?

உண்மைக் குயிரவாழு முத்தமருக் கச்சமிலை;
திண்மையிலார்க் கில்லை திரு.

என்றுந்தான்; எல்லாந்தான்; எங்குந்தான் சுத்தான்மா.
பொன்றுவது பூதப் †புரி

---

* சாதலில்

† உடல்

## ௧௨. ஜீவன்முக்தியியல்.

### ௧. மெய்த்துறவு.

மனத்தி லருண்மல்கி மாணுலக முய்யுந்
தனைத்துறந்த தொண்டே தவம்.

கனத்தசெல் வத்தாடுங் கட்டின்றி வாழு
மனத்துறவே வாய்மைத் துறவு.

*பத்தாறும் வென்று பழுதற்ற சுத்தான்ம
சித்தரவர் தேவரெனத் தேர்.

அடிமைத் தளையுதறி யஞ்சாத வீரர்,
மடமைத் துயர்மாற்றி னார்.

அழகெனக் காட்டி யடிமை தருவ,
முழுதும் விலக்க முயல்.

---

*காமம் குரோதம், லோபம், மோகம், மதம் மச்சரம், ஈர்ஷை, இடம்பம், தர்ப்பம், அகுபை-ஆகியபத்துத் தீமைகள். ஐம்புலம்+மனம் ஆகியஆறு

## உ. பற்றறுத்தல்.

பற்றே துயராகும்; பற்றறலே பேரின்பம்;
கற்றுநின் றுரின் கருத்து.

கட்டுற்ற நெஞ்சங் கவலைக்கல்; பற்றுகளை
விட்டது பேரின்ப வீடு.

நாளாக நாளாக நாட்செய்த மாயம்போய்;
ஆளாத லீசற்கென் றும்.

*அழியாப் பொருளை யழியாது பற்றின்,
அழியா வமரநிலை யாம்.

கண்கொட்டும் புன்னகைக்குங் கட்டுமா மாயமனம்;
கண்கொட்டாக் காவல் புரி.

---

*பரமாத்மா

கஉ. ஜீவன்முக்தியியல்

க. ஆசைத்தளை.

ஆசையழுக் கில்லாம லைம்பொறியை வென்றவனூர்?
ஆசா னுலகிற் கவன்.

தூசி துடைக்கத் துலக்குமுகங் கண்ணாடி;
ஆசைதுடைத் தான்மனமான் மா.

ஆசை பொறுமை யகந்தை மனவலையே
பாசப் படுத்தும் பகை.

பொறிபுலன்க ளூடு புகுந்துமனம் பற்றி
வெறியேற்று மாய விழை.

சிரிப்பு மழுகையுஞ் சேர்ந்தமன மாயம்,
அரிப்பு மெரிப்புமபோ லாம்.

## ச. ஸாதனம்.

ஆர்வக் கனலுடனே யாண்டவனைக் கூவிடுக!
பேரமுத வானம் பெயும்.

தெய்வ வொளிதனையே தேடு; பிறவெல்லாங்
கைசோருங் காலத்தி லே.

இருக்கிறே னிங்கென் றிதயத்தா னுன்னை
யழைக்கிறா னங்கே யடை.

தெய்வ வடிவென்றே தேர்ந்திவ் வுலகுய்யுந்
துய்யநலத் தொண்டே துறவு.

மனத்து டுருவி *மணியன் றெளிகாண்;
இனிக்கு மிகமும் பரம்.

---

*சிற்சபை, பொற்சபை.

## ரு. அமைதி நிலை.

என்றுங் களித்துள் ளொதற்குந் தளராது,
நின்றநிலை நீளமைதி யாம்.

உறவுந் துணையுமுனக் குன்னுன்மா; வுண்மை
யறிவின்ப மாகு மது.

பொன்னும் பொருளும் புவியும் பொருந்திடினுந்
தன்னுள்ளே யின்பந் தனக்கு.

இயல்பான வுன்னை யியல்பா யறிந்தே,
*யியல்பாகி யின்புற் றிரு.

விழியை வழியை விளக்கியறி வூக்கும்
ஒளியை வழுத்திடுவோம் ஓம்.

---

* ஸஹஜநிலையில்

## கூ. அறவோர்.

பரமன் வழிபாடாய்ப் பார்வாழ்வை வாழ்வார்
நரதேவ சித்தர் நனி.

*அறிதற் கரிதை யறிந்தறிவாய், மாந்தர்க்,
கறிவொளியாய் வாழ்வ தறம்.

†அருட்கோயில் சுற்றி யணிபெற்று மாந்தர்,
திருத்தக்க வாழ்வமையச் செய்.

‡அதிமனிதர் தீரர், அருட்சக்தி மைந்தர்,
புதுயுகவீ ரர்பொலிக வே!

அறக்கடவுள் வாழி! யறம்வாழி! வாழி
§யறவோர் அருள்வெற்றி யே!

---

*தன்மயமான ஆன்மா

† இறைவனருளைப் பெறச்சாதனஞ் செய்யும் தியான மந்திரம்.

‡தெய்வமனிதர் God- men, Supermen

§ சுத்தான்ம சித்தர்

## கஉ. ஜீவன் முக்தியியல்

### எ. போற்றி.

போற்றுகிறே னுன்னைப் புவியே, யிறைவடிவென்
றாற்றுகிறே னன்புப் பணி.

நடமாடுங் கோயில்காள், ஞாலத் துயிர்காள்,
கடவுட் குலமொன்றே காண்!

*வான்பழுத்த வாழ்வே மகிழ்சமயிர்க் கால்களிலுந்
தேன்செழித்த தெய்வத் திரு!

இறைவ னருட்குடைக்கீ ழெல்லாரு மின்ப
நிறைவெய்தி வாழுகவே நீடு.

விண்குடை தாங்கியருள் வேந்தனுக்கே யாளாவோம்.
பண்ணும் பணியும் படைத்து.

---

* உன்னையுள்ள வானரசின் இன்பத்திற் கனிந்த உலகவாழ்வு

## அ. அனைத்தும் வாழ்க !

இதயம்பூ; மந்திரமும் இன்சொல்லா, யன்புத்
துதியாக வேயருளாய் தொண்டு!

போரற்றுப் பாரிற் பொறுமை விளங்கியுயிர்
சீருற்று வாழ்க—செறிந்து!

உன்பொற் றிருமுகத்தை யுள்ளும் புறமுங்கண்
டின்புற் றிருக்க வருள்!

இத்தல வட்டமெலா மென்மனைபோற் றெண்டுசெய
சக்திக் கனலெனக்குத் தா!

நல்லறிஞ ரோங்க, நலமோங்கிப் பூவெங்கும்
எல்லாரும் வாழ்க வினிது!

ஓம் சுத்த சக்தி!

சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றிய
தருமஸாதனம் முற்றிற்று.

ஓம் சுத்த சக்தி.

எல்லா வுலகிற்
கிறைவ னொருவன்
எல்லா வுடலு
மிறைவனு லயமே.

கமர்சியல் பிரஸ், 60, மாதாக்கோயில் வீதி, புதுச்சேரி.

# அரிய பெரிய நூல்கள்.

| | | | |
|---|---|---|---|
| தர்மஸாதனம் (ஸாதன முறையைத் தெளிவாக விளக்கும் விரிவுரையுடன்) ... | 1 | 8 | 0 |
| பரமஹம்ஸ லீலை ... ... | 2 | 4 | 0 |
| பாரத சக்தி ... ... | 1 | 8 | 0 |
| புதுயுகப் பாட்டு ... ... | 0 | 5 | 0 |
| ரமண விஜயம் ... ... | 2 | 0 | 0 |
| பெரியார் வரலாறு ... ... | 2 | 0 | 0 |
| அரவிந்தப் பிரகாசம் ... ... | 0 | 12 | 0 |
| Yoga of Sri Aurobindo ... ... | 2 | 0 | 0 |
| கீதை காட்டும் பாதை ... ... | 0 | 10 | 0 |
| இன்பமாலை ... ... | 0 | 5 | 0 |
| இராமலிங்க விஜயம் ... ... | 0 | 10 | 0 |
| Mahatma Ramalingam ... ... | 1 | 0 | 0 |
| பைந்தமிழ்ச் சோலை ... ... | 0 | 4 | 0 |
| உடலுறுதி ... ... | 0 | 10 | 0 |
| திருக்குறளின்பம் ... ... | 0 | 10 | 0 |
| இன்று மனிதனும் இனி வரும் மனிதனும்... | 0 | 5 | 0 |

பாரத சக்தி நிலையம், புதுவை.

ANBU NILAYAM,
No. 11, TANK ROAD,
SINGAPORE (S. S.)